[5th May 1962

**Sri J. MATHA GOWDER :** ஸார், 1961-வது வருஷம், டிசம்பர் மாதத்தில் கூலி நிர்ணய போர்டு 15 நயாபைசா உயர்வு கொடுக்க வேண்டும் என்று சொன்னதின் பேரில், தோட்ட முதலாளிகளால் அது கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால், வேஜ் போர்டு தீர்மானம் செய்த பிறகு, 3, 4 மாதங்களுக்குமேல் கெஜட்டில் பிரசுரம் ஆகாமல் இருப்பதால் தாமதம் ஏற்படுகிறது. ஆகவே, இந்த மாதிரி தீர்மானம் வந்தபிறகு, உடனடியாக கெஜட்டில் பப்ளிஷ் செய்ய முயற்சி செய்வார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** கெஜட்டில் பிரசுரம் செய்வதில் அனுவசியமான தாமதம் இல்லை.

**SRI K. PONNIAH :** தலைவர் அவர்களே, 1961, டிசம்பர் மாதத்தில் கூலி நிர்ணய போர்டு இடைக்கால கூலி உயர்வு கொடுத்ததற்கு மிகவும் மகிழ்ச்சி. 15 நயாபைசா உயர்வு கொடுத்திருக்கிறார்கள். அதே மாதிரி காப்பித் தோட்டத் தொழிலாளர்களுக்கும், கார்டமம் தோட்டத் தொழிலாளர்களுக்கும், இன்னும் அரசாங்க க்வினைன் தோட்டத் தொழிலாளர்களுக்கும் இந்த உயர்வைக் கொடுக்கும்படி சர்க்கார் சிபாரிசு செய்வார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இதற்குத் தனிக் கேள்வி வேண்டும்.

*Potato Seeds (Import)*

*29 Q.—**SRI T. KARCHA GOWDER :** கனம் விவசாய அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) உருளைக்கிழங்கு விதைகள் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்து விவசாயிகளுக்கு விநியோகம் செய்யப்பட்டனவா ?

(இ) அப்படியானால், எவ்வளவு விதைக்கிழங்கு ?

**THE HON. SRI P. KAKKAN :** (அ) & (இ) A quantity of 47 tons and 14 cwt. of Great Scot variety of seed potatoes was imported during March 1962 from the United Kingdom (Scotland). The entire lot being a small consignment is being planted in State Seed Farms for multiplication. No seed was supplied to ryots from the imported stocks. The produce that will be got from these farms will be distributed to ryots in the next season.

**SRI T. KARCHA GOWDER :** நீலகிரி ஜில்லாவிலே உருளைக்கிழங்கு 20,000 ஏக்கரில் விவசாயம் செய்யப்படுகிறது. அதற்கு சர்க்கார் 53 டன்தான் விதைக்கிழங்கு கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். விவசாயிகள் மகாநாட்டில் 8,000 டன் விதை வேண்டுமென்று கோரப்பட்டிருக்கிறது. ஆகவே, அதிகப்படியான விதைகளை வழங்க எப்பொழுது ஏற்பாடு செய்யப்படும் ?

**THE HON. SRI P. KAKKAN :** நீலகிரி ஜில்லாவில் உள்ள உருளைக்கிழங்கு விவசாயிகளுக்கு அதிகப்படியான விதைகள் கொடுக்க அரசாங்கம் ஏற்பாடு செய்துவருகிறது. அதற்காகவே,

5th May 1962]

'பாரின் எக்ஸ்சேஞ்ச்' மத்திய சர்க்காரில் கேட்டோம். அவர்கள் குறைவாகத்தான் கொடுத்திருக்கிறார்கள். இருந்தபோதிலும், 1963-ல் அதிகப்படியாக வாங்கி விவசாயிகளுக்குக் கொடுக்க ஏற்பாடுகள் செய்யப்படும்.

**SRI J. MATHA GOWDER :** உருளைக்கிழங்கு பயிருக்கு 'லேட் ப்ளைட்' என்ற வியாதி வருவதால், விவசாயிகள் விதைகளை தாங் களே எடுத்து வைக்கமுடியவில்லை. இரண்டு போகம் கிழங்கு சாகுபடி செய்த போதிலும், விதை எடுத்து வைத்தால் அதில் பூச்சி இருக்குமோ என்ற பயத்தினால், விவசாயிகள் விதைகளை எடுத்து வைக்க முடிவதில்லை. தொடர்ந்து இன்னும் ஒரு ஆண்டு க்கு விதைகள் அவர்களுக்குக் கொடுக்கப்படவில்லையென்றால், நீல கிரியில் உருளைக்கிழங்கு விவசாயமே அடியோடு கெட்டுவிடும். ஆகவே, மத்திய சர்க்காரில் கேட்டு 'பாரின் எக்ஸ்சேஞ்ச்' அதிக மாக வாங்கி அதிகமாக விதைகளை வழங்க சர்க்கார் முயற்சி செய்வார்களா ?

**THE HON. SRI P. KAKKAN :** கனம் அங்கத்தினர் சொல்கிற படி அரசாங்கம் அக்கறை காட்டிக்கொண்டுதான் வருகிறது. இந்தியன் பொடாடோ ரிஸர்ச் இன்ஸ்டிட்யூட் அதிகாரிகளையும், மற்ற இலாகா அதிகாரிகளையும் வைத்து அதிகப்படியான விதை களை விவசாயிகளுக்குக் கொடுக்க வழிவகை செய்யப்படுகிறது. நீலகிரியில் மட்டுமின்றி, சிம்லாவிலும், இதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுவருகின்றன.

*Government Forests (Fire accidents)*

* 32 *Q.*—**SRI J. MATHA GOWDER :** கனம் கூட்டுறவு அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப் பாரா—

நீலகிரியில், கிராமங்களுக்கு அருகாமையில் உள்ள அரசாங் கக் காடுகளில் அடிக்கடி தீ விபத்து ஏற்படுவதால் கிராம மக்கள் பயப்படுவது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

**THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR :** The Government are aware of the incidence of forest fires near villages, usually caused by local incendiarism. These fires are not allowed to spread and affect any village holdings. The Government are not aware that the villagers are afraid about these fires. They have not received any represenation.

* 33 *Q.*—**SRI J. MATHA GOWDER :** கனம் கூட்டுறவு அமைச் சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சமீபத்தில் பார்சன்ஸ் பள்ளத்தாக்கு காட்டில் தீ அணைக்கச் சென்று மூன்று காட்டிலாகா சிப்பந்திகள் மரண மடைந்தது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

(இ) இந்த விபத்து எப்படி ஏற்பட்டது ?